# மேற்றிராணியரல்லாத துதியர் ஒருவர் பெயரால் - பொது

## Os – Justi

**பிரவேசம்: சங். 36: 30-31**

நீதிமானுடைய வாய் ஞானத்தை உரைக்கும். அவருடைய நாவு நியாயத்தைப் பேசும். அவருடைய சர்வேசுரனின் நியாயப்பிரமாணம் அவருடைய இருதயத் திலிருக்கிறது. (பா. கா. அல்லேலுய்யா, அல்லேலுய்யா) (சங். 1) பொல்லா தவர்களைக் குறித்து அருவருப்படையாதே: அக்கிரமம் செய்கிறவர்கள் பேரில் வெறுப்பு கொள்ளாதே. – பிதாவுக்கும். . .

**சபைச் செபம்**

செபிப்போமாக: சர்வேசுரா, தேவரீர் உம்முடைய துதியரான முத்திபேறுபெற்ற (இன்னாருடைய) வருடாந்திர திருநாளினால் எங்களை மகிழச் செய்கிறீரே. அவருடைய பரலோக பிறப்புநாளைக் கொண்டாடுகிற நாங்கள் அவருடைய முன் மாதிகையைப் பின்பற்றி நடக்கத் தயவாய்க் கிருபை செய்தருளும். தேவரீரோடு இஸ்பிரித்துசாந்துவின் ஐக்கியத்தில் . . .

**ஞானகமத்திலிருந்து வாசகம்** (சர்வப். 31. 8-11)

குற்றமில்லாது காணப்பட்ட ஆஸ்திக்காரன் பாக்கியவான் பொன்னின் பின் போகாதவனும், பணத்திலுந் திரவியத்திலும் நம்பிக்கை வையாதவனும் பாக்கியவான். அவன் யார்? அவனைப் புகழுவோம் ஏனெனில், தன் சீவிய காலத்தில் அதிசயங்களைச் செய்தான். அதில் பட்சிக்கப்பட்டு உத்தம னானவன் எவனோ அவனுக்கு நித்திய மகிமை கிடைக்கும் மீறி நடந் திருக்கக்கூடும் ஆனால் மீறினவனல்ல, தின்மை செய்திருக்கக் கூடும், ஆனால் செய்யவில்லை. ஆனதால் அவன் பொருட்கள் ஆண்டவரிடத்தில் நிலையாக்கப பட்டன் பரிசுத்தருடைய சபை யாவும் அவன் தர்மங்களைப் பிரசித்தப்படுத்தும்.

**படிக்கீதம்**: (சங். 91. 13-14)

நீதிமான் பனையைப்போல வளம்பெற்று, லிபானிலுள்ள சேதுரு மரத்தைப் போல ஆண்டவருடைய ஆலயத்திலே செழித்தோங்குவான். (சங். 3) காலையிலே உமது கிருபையையும், இரவிலே உமது சத்தியத்தையும் அறிவிக்கும்படியாக.

**அல்லேலுய்யா கீதம்**

அல்லேலுய்யா, அல்லேலுய்யா (இயாக. 1. 12) துன்பத்தைச் சகிக்கிறவன் பாக்கியவான்: ஏனெனில் அவன் சோதிக்கப்பட்ட பின்னர், சீவியத்தின் முடியை பெற்றுக் கொள்வான், அல்லேலுய்யா

*சப்தரிகை ஞாயிறுக்குப்பின் அல்லேலுய்யா கீதத்தை விட்டுவிட்டு கீழேயுள்ளதைச் சொல்ல வேண்டும்*

**நெடுங்கீதம்:** (சங். 111. 1-3)

ஆண்டவருக்கு அஞ்சி, அவருடைய கற்பனைகளில் மிகவும் பிரியப்படுகிறவன் பாக்கியவான். – அவனுடைய சந்ததி பூமியில் வல்லமையுள்ளதாகும்:. செம்மையானவர்களின் தலைமுறை ஆசீர்வதிக்கப்படும். மகிமையும் செல்வமும் அவன் வீட்டிலிருக்கும். அவனுடைய நீதி என்றென்றைக்கும் நிலைநிற்கின்றது.

*பாஸ்குகாலத்தில் படிக்கீதம் முதலியவற்றை விட்டுவிட்டு கீழேயுள்ளதை சொல்ல வேண்டும்.*

அல்லேலுய்யா, அல்லேலுய்யா – (இயாக. 1: 12) துன்பத்தைச் சகிக்கிறவன் பாக்கியவான். ஏனெனில் அவன் சோதிக்கப்பட்ட பின்னர், சீவியத்தின் மூடியை பெற்றுக் கொள்வான். - (சர்வ. 45: 9) ஆண்டவர் அவரை நேசித்து, அவரை அலங்கரித்தார். மகிமையின் ஆடையை அவருக்கு உடுத்தினார், அல்லேலுய்யா

**சுவிஷேசம்** (லூக். 12: 35-40)

அக்காலத்தில் சேசுநாதர் தம் சீடர்களுக்கு திருவுளம் பற்றினத்தாவது: உங்கள் இடைகள் வரிந்து கட்டப்படவும், எரிகிற தீபங்கள் உங்கள் கைகளில் இருக்கவுங்கடவது. தங்கள் எஜமான் வந்து தட்டும்போது, உடனே அவருக் குத் திறக்கும்படியாக அவர் கலியாணத்தினின்று எப்பொழுது திரும்புவாரென்று காத்திருக்கிற மனிதருக்கு நீங்கள் ஒப்பாயிருக்கக்கடவீர்கள். எஜமான் வரும் போது, விழித்திருக்கிறவர்களாகக் காணப்படுகிற ஊழியரே பாக்கியவான்கள் அவர் தமது இடையை வரிந்து கட்டி, அவர்களைப் பந்தியமரச்செய்து, அவர்களில் ஒவ்வொருவரிடத்திலும் போய் அவர்களுக்குப் பரிமாறுவாரென்று உண்மையாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். அவர் இரண்டாஞ் சாமத்தில் வந்தாலும், மூன்றாஞ் சாமத்தில் வந்தாலும், அவ்வண்ணமே காண்பாராகில், அவ்வூழியர் பாக்கியவான்கள். அல்லாமலும், திருடன் இன்ன வேளையில் வருவானென்று வீட்டெஜமான் அறிந்திருந்தால், சந்தேகமற விழித்திருந்து, தன் வீட்டைக் கன்னமிடவொட்டானென்று அறிந்து கொள்ளுங்கள். அப்படியே,

நீங்களும் ஆயத்தமாயிருங்கள். ஏனென்றால் நீங்கள் நினையாத வேளையில் மனுமகன் வருவார் என்று திருவுளம்பற்றினார்.

**ஒப்புக்கொடுத்தல்** (சங். 88: 25)

நமது உண்மையும், நமது இரக்கமும் அவரோடிருக்கும். நமது நாமத்தால் அவருடைய வல்லமை உயரும். (பா. கா. அல்லேலுய்யா)

**அமைதி மன்றாட்டு**

ஆண்டவரே, தேவரீருடைய பரிசுத்தவான்களின் ஞாபகமாகத் தோத்திரப் பலிகளைத் தேவரீருக்குப் பலியிடுகிறோம். இவைகளினால் இப்பொழுதும் எப்பொழுதும் நேரக்கூடிய தீமைகளிலிருந்து விடுதலையாவோம் என நம்பியிருக்கிறோம். – தேவரீரோடு ….

**உட்கொள்ளுதல்** (மத். 24. 46-47)

எசமான் வரும்போது விழித்திருக்கிறவனாய்க் காணப்படும் ஊழியன் பாக்கியவான். தன் செல்வம் அனைத்துக்கும் அவனை அதிகாரியாக ஏற்படுத்துவான், என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். (பா. கா. அல்லேலுய்யா)

**உட்கொண்ட பின்**

செபிப்போமாக: எங்கள் சர்வேசுரா, பரலோக போசனத்தினாலும் பானத்தினாலும் உண்பிக்கப்பட்ட நாங்கள் யாருடைய ஞாபகமாக அவற்றை பெற்றுக் கொண்டோமோ, அவருடைய செபங்களினால் பாதுகாக்கப்படத் தேவரீரை இரந்து மன்றாடுகிறோம். தேவரீரோடு . . .

அட்டவணை

| | | |
|---|---|---|
| 1 | மேற்றிராணியரல்லாத துதியர் ஒருவர் பெயரால் - பொது<br>Os – Justi | |